REGD. NO. M. 6511 ★ தனி;இதழ் 0—1—0 (7 காசுகள்) ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

**'நம் நாடு'**
புதிய சந்தா விகிதம்
★

| | | | |
|---|---|---|---|
| மூன்று மாதம் | ... | ... | ரூ. 6 |
| ஆறு மாதம் | ... | ... | ரூ. 12 |
| ஒரு வருடம் | ... | ... | ரூ. 24 |

தனி இதழ் 7 காசுகள்
இலங்கையில் 10 சதம்

மலர் 4] சென்னை: சித்திரை 1உ சனி (13—4—57) ★ ★ வெளியீடு: சித்திரை 2உ ஞாயிறு (14—4—57) [இதழ் 262

# 'மனதாரச் சிந்திப்பீர்! ஒதுங்கி நிற்காதீர்!'

## 'பார்ப்பனராகவே என்றென்றும் நீடிக்க முடியாது'

## 'இந்த சமுதாயம் வளரா விட்டால் வடநாடுகாட்டும் வழிதான் தென்னாட்டிற்கு!'

### ஜப்பான் சமூக உதாரணம் காட்டி பார்ப்பன இளைஞர்களுக்கு அண்ணாவின் அன்பழைப்பு

"இப்படி வளர்ந்து வருகின்ற திராவிட முன்னேற்றக் கழகத்தின் பெருண்மைகளை எனது மதிப்பிற்குரிய பார்ப்பன இளைஞர்களும், அறிவாளிகளும், படித்த வாலிபர்களும் கொஞ்சம் மனதாரச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். அவர்களுக்கு நான் பன்னிப்பன்னி பல ஆண்டு காலமாகச் சொல்லிவருகிறேன்; இன்னும் அவர்கள் என்னுடைய பிடியிலிருந்து தப்பித்துக் கொண்டுதான் போகிறார்கள்.

"மடாதிபதிகளைக் கண்டிக்கிறோம்—அவர்கள் பார்ப்பனரல்லாதார் என்று தெரிந்தும் கண்டிக்கிறோம்! ஜமீன்தாரர்களைக் கண்டித்தோம்—அவர்கள் பார்ப்பனரல்லாதார் என்று தெரிந்தும் கண்டித்தோம்! ஜஸ்டிஸ் கட்சியைக் கண்டித்தோம்—அதிலுள்ளவர்களெல்லாம் பார்ப்பனரல்லாதார் என்று தெரிந்தும் கண்டித்தோம்!

**ஒதுங்கி நிற்காதீர்!**

"பார்ப்பனியத்தைக் கண்டித்தால் அது பார்ப்பனரைக் கண்டிப்பதாகும் என்று கருதி இன்னமும் நீங்கள் தி. மு. கழகத்தைவிட்டு ஒதுங்கி நிற்கிறீர்கள். ஏன் ஒதுங்கி நிற்கவேண்டும்?

"அப்படி ஒதுங்கி நின்றால், அறிவாளிகள் சமூகம் என்று உங்களுக்கு இருக்கிற பெயர் போய்த்துப்போகும். ஏனெனில், இன்னும் ஒரு 10 வருடத்திற்குத்தான் தி. மு. கழகம் பிறருடைய துணையைக் கேட்டுப் பெறுகின்ற கட்டம் இருக்கும். அதற்குப் பிறகு, பிறருடைய உதவியில்லாமலேயே தி. மு. கழகம் தன் காரியங்களைச் சாதித்துக் கொள்ளும் கட்டம் பிறக்கும்"

"அதற்கு 10 வருடத்திற்குப் பிறகு, யாரும் தி. மு. கழகத்தை அண்டி வரவேண்டிய அளவிற்கு நல்ல ஒரு எதிர்காலம் தி. மு. கழகத்திற்கு ஏற்படும்.

"இந்த உள்ள உண்மையை நான், சொன்னால் புரியும் என்ற முறையிலும், சொன்னால் புரிந்து கொள்பவர்கள் இங்கிருக்கின்றார்கள் என்று நான் அறிந்திருக்கின்ற காரணத்தாலும் தெளிவாகச் சொல்கிறேன்—இந்த 10 வருடம்தான் நீங்களும், மற்ற சமுகத்தாரும் ஒன்றுபடுவதற்கேற்ற ஒரு காலகட்டம் பிறந்திருக்கிறது. நீங்கள் கடைசி வரையில் பார்ப்பனராகவே இருக்கமுடியும் என்றும் கருதவேண்டாம். அது நடக்கவும் நடக்காது. இன்னமும் ஏன் ஒதுங்கியிருக்கவேண்டும்? அதனால் என்ன இலாபம்? என்ன மதிப்பு வந்துவிடும்?

"ஆகையால்தான், எப்படி ஜப்பான் நாட்டில் சமூரா என்ற வகுப்பார் தாங்களே ஒன்றாகக்கூடி, இனி நாம் தனிவகுப்பு என்றிருக்கிற வரையில் உலகத்தில் ஜப்பானுக்கு மதிப்பு இருக்காது என்று தீர்மானித்து, ஒரேநாளில் சமூரா வகுப்பார் தங்களுக்கு இருந்த பிறப்புரிமைகளை யெல்லாம் விட்டுக்கொடுத்து, ஜபபான் நாட்டு சமுதாயத்தில் இரண்டறக் கலந்தார்களோ அதுபோல், பிராமண வாலிபர் மாநாடு, பிராமண முற்போக்கு வாலிபர் மாநாடு—பிராமணர்களுடைய முன்னேற்ற வாலிபர்கள் மாநாடு என்று இப்படிப் பல பெயர்களில் சேர்ந்தாலும் சரி, பார்ப்பனீயத்திலுள்ள கேடுபாடுகளை நீக்க 'படித்த பார்ப்பனர்களாகிய நாங்கள் முன்வந்திருக்கின்றோம்' என்று நீங்கள் கிளம்பினாலொழிய உண்மையிலேயே இந்த நாட்டில் வகுப்புகளுக்குள் இருக்கும் மனமாச்சரியமும் போகாது-சமுதாயம் வளராது.

"இந்த சமுதாயம் வளராது இருக்கின்ற வரையில்—தென்னாட்டைப் பொறுத்தவரையில்—பார்ப்பனர்-பார்ப்பனரல்லாதார் பேதம் இருக்கின்றவரையில்—தெளிவாக திட்டமாக எழுதிக்கொள்ளுங்கள்—வடநாட்டான் காட்டுகிற வழியில்தான் தென்னாடு நடக்கும்.

**ஆள முடியுமா, அவர்களால்?**

"பார்ப்பனர்—பார்ப்பனரல்லாதார் பிரச்சினை தீர்க்கப்பட்ட மறுமாதத்தில், வடநாட்டான் தென்னாட்டை அடக்கி ஆளமுடியாது என்ற பேருண்மையை வடநாட்டுத் தலைவர்களும் உணர்ந்து கொள்வார்கள்.

"ஆகவேதான், பார்ப்பன நண்பர்கள் இந்தக் கட்டத்தில் செய்யவேண்டிய காரியம் நாட்டுக்காகவும், தங்கள் சமூகத்துக்காகவும், காலத்திற்காகவும், அறிவுக்காகவும் என்றுதான் கருதவேண்டுமே தவிர, வேறெந்தத் தப்புக் கணக்கும் போடக்கூடாது.

**பணியாற்றுக! பலன் பெறுக!**

"ஆகவேதான், இன்றையதினம் அவர்கள் தங்களிடையுள்ள மனமாச்சரியம் இல்லாமலிருக்கச் செய்ய நல்ல சமுதாய சீர்திருத்தக் காரியத்தில் ஈடுபட்டு, எங்களுடன் இரண்டறக் கலந்து நல்லமுறையில் பணியாற்றினால் நம் வாழ்நாளில் நிச்சயமான பலனைப் பெறமுடியும் என்ற நம்பிக்கை எங்களுக்கு உண்டு.

"அந்தவகையில் வெளியில் பணியாற்றுவதற்கும், சட்டசபையில் நல்ல காரியங்களைச் செய்வதற்கும், நல்ல பயிற்சி பெற்று, ஜனநாயகத்தைக் காப்பாற்றுவதற்கும் நீங்கள் உறுதுணையாக எங்களோடு இருக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்"

*என்று, 7—4—57-ல், சென்னை-திருவல்லிக்கேணியில் நடைபெற்ற கூட்டமொன்றில் கருத்துரை ஆற்றுகையில் அண்ணா அவர்கள், குறிப்பிட்டார்; அவரது பேருரையின் முதல் இருபகுதிகள் ஏற்கனவே தரப்பட்டுள்ளது; இறுதி பகுதி இங்கு தரப்படுகிறது:—*

**தி.மு.க. மேற்கொண்டுள்ள மாபெரும் பணி**

"தி. மு. கழகம் நாலைந்து வகையான காரியங்களைத் தன்னுடையதாக்கிக் கொண்டிருக்கின்றது.

"சரியாகவோ தவறாகவோ, சமுதாயத்தைத் திருத்தவேண்டுமென்பதில் தி. மு. கழகம் ஈடுபட்டிருக்கிறது.

"சரியாகவோ தவறாகவோ, இந்த நாட்டில் இருக்கின்ற மத மாச்சரியங்கள், மதத்தின் பேரால் செய்யப்படுகின்ற மூடப் பழக்க வழக்கங்கள், மதத்தின் பேரால் ஈடுபடுத்தப்பட்டிருக்கும் பிடிவாதங்கள் இவைகளெல்லாம் முறியடிக்கப்பட்டு, மதம் என்பது அறிவாளிகள் ஆனந்தம் பெறுவதற்கு ஏற்றதும், ஆன்றோர்கள் காட்டிய நெறியை மறவாதிருப்பதும், மக்களுக்கு நன்மை பயப்பதற்கு ஏற்பட்டிருக்கின்ற ஒரு நல்ல வழி என்ற அளவுக்கு மதத்தைப் பயன்படுத்த வேண்டும்—அதற்கு நாம் உறுதுணையாக இருக்கவேண்டும் என்ற அந்தப் பணியையும் தி. மு. கழகம் தன்னுடையதாக்கிக் கொண்டிருக்கிறது.

"அதைப் போலவே, ஜனநாயகத்தைக் கட்டிக் காப்பாற்ற வேண்டும்—நாட்டில் நல்ல ஒரு எதிர்க் கட்சியை உருவாக்கவேண்டும்; அந்த எதிர்க் கட்சி எதேச்சாதிகாரமாக நடக்கும் காங்கிரஸ் கட்சிக்குப் பலமான மறுப்புக் கட்சியாக இருக்கவேண்டும் என்ற கடமையை வைத்திருக்கிறது.

"இந்த 3 கடமைகளுடன்கூட மூலாதாரமான கடமையாக ஒன்று இருக்கிறது; அதுதான், திராவிட நாட்டை திராவிடருக் காக்குவது என்ற மூலாதாரமான அடிப்படையைக் கொண்டது!

"இந்த அடிப்படைக் கொள்கையை நாம் எந்தெந்த இடத்திலிருந்து, எந்தெந்த வகையில் பணியாற்றி வெற்றி பெறச் செய்ய முடியுமோ, அதற்கு சட்டசபைக் காரியங்கள் எந்த அளவுக்குப் பயன்பட முடியுமோ அந்த அளவுக்குப் பணியாற்ற வேண்டும் என்ற உள்ளத் தெளிவும், உற்சாக உணர்ச்சியும் நமக்கு ஏற்படவேண்டும் என்று நீங்களும் விரும்பவேண்டும். நாங்களும் அந்த முறையில்தான் பழக்கிக் கொள்வோம்; அந்த முறையிலே தான் நாங்களும் சட்டசபையில் பணியாற்றுவோம்.

**அலட்சியமும் - ஆய்வும்**

"நம்முடைய நாட்டில் 15-இடங்களைப் பிடித்திருக்கும் தி. மு. கழகத்தை சில இடங்களில் அலட்சியமாகக் கருதினாலும் சில வட்டாரங்களில் உள்ளவர்கள், இந்த 15 பேர் வந்திருக்கும் நிலை வாழ்த்தி வரவேற்கத்தக்கது' என்றும், குறிப்பிட்டுக் கவனிக்கத்தக்கது என்றும், ஆராய்ந்து பார்க்கத்தக்க அரசியல் சம்பவம் என்றும் எண்ணிக்கொண்டிருக்கிறார்கள்; எண்ணிக்கொண்டிருக்கின்ற முறையில் சில பத்திரிகைகளிலும் சில தலைவர்கள் இது குறித்து தமது கருத்துக்களை தெரிவித்து வருகிறார்கள்.

**இரு பிரச்சினைகள்**

"அப்படி தெரிவிக்கின்ற கருத்தில் தமிழ் நாட்டு மக்களுடைய மனத்தில் அதிகமாக உறுத்திக்கொண்டிருக்கிற பிரச்சினைகள் இரண்டு என்று நான் கருதுகிறேன்.

"ஒன்று—சட்டசபையில் தி. மு. கழகத்தார் 15 பேர் இருக்கின்றனர். காங்கிரஸ் சீர்திருத்தக் கமிட்டியினர் 14 பேர் இருக்கின்றனர்; கம்யூனிஸ்டுகள் 4 பேர் இருக்கின்றனர்; பி. சோ.-க்கள் 2 பேரும், சோஷலிஸ்டுகள் 2 பேரும் இருக்கின்றார்களே—இவர்களில் யார் எதிர்க்கட்சியாவது? யார் எதிர்க்கட்சித் தலைவராவது?—என்ற ஒரு பிரச்சினை மக்கள் மனதில் இன்று மேலெ முந்தவாரியாக இருக்கிறது.

**நல்ல மனம் படைத்தவர்கள்**

"அந்தப் பிரச்சினையில் பல நல்ல மனம் படைத்த அரசியல் தலைவர்கள், என்னிடத்தில் தங்கள் நண்பர்கள்மூலம் சொல்லி அனுப்புகிறார்கள்—'நீங்கள் நல்ல முறையில் எதிர்க்கட்சியாக இருந்து பணியாற்ற வாய்ப்பு பெற்றவர்கள்; அதற்கேற்ற திறமை இருக்கிறது, உங்களிடம்' என்று சொல்லும் நோத்தில் உண்மையிலேயே நான் அந்த அளவிற்கு தி. மு. கழகத்திற்கு ஒரு நல்ல யோக்கியதையை தேடித் தந்த உங்கள் அறிவாற்றலைப் பாராட்டுகிறேன்; உங்களுக்கு வணக்கம் கூறுகிறேன். அப்படி தி. மு. கழகத்தை வாழ்த்தி—வரவேற்று—மதிப்பிட்டு — பாராட்டுபவர்களில், இன்றைய தினம் நாமெல்லாம் கண்டு ஆச்சரியப்படத்தக்க வகையில் ஆச்சாரியார் தம்பத்திரிகைகளில் எழுதும்போது, 'தி. மு. கழகம் சிறந்த எதிர்க்கட்சியாக இருக்க வசதி பெற்றிருக்கிறது' என்று குறிப்பிட்டு எழுதியிருக்கிறார்.

**காமராசருக்கு எதிராக அல்ல!**

"இன்றைய தமிழ்நாட்டு அரசியலில், ஒரு எதிர்க்கட்சி தேவை என்றால் அது தனிப்பட்ட காமராசருக்கு அல்ல; காங்கிரசுக்கு எதிராகப் பலம் வாய்ந்த எதிர்க்கட்சி வேண்டும் என்பதுதான் எங்கள் கொள்கை. எங்களுக்குக் கொள்கையே தான் அடிப்படையே தவிர, ஆளைப் பற்றிய அடிப்படையல்ல. எங்களுக்கு, ஒரே உலையில் வார்த்தெடுக்கப்பட்ட வார்ப்படம்போல்—காமராசராக இருந்தாலும், ஆச்சாரியாராக இருந்தாலும், கனையாளராக இருந்தாலும், வேறு யாராக இருந்தாலும் சரி—காங்கிரசுக்கு ஒரு எதிர்க்கட்சி வேண்டுமே தவிர, காமராசருக்கு எதிர்க்கட்சி வேண்டும் என்பதல்ல!

**மாமந்திரம் தெரிந்த மேதை!**

"அந்த எண்ணம் காங்கிரஸ்காரர்களுக்கு இருக்கிறது—'திராவிட கழகத்திற்கும், தி.மு.கழகத்திற்கும் மோதுதலை உண்டாக்கிவிட்டேன்; முன்னேற்றக் கழகத்தை ஒழித்துக்கட்ட திராவிட கழகம் போதும்' என்று இந்த முதல் மந்திரியல்லவா பேசினார் லயோலா கல்லூரியில்? 'அவர்களை அடக்க பெரியாரையே ஏவுவேன்; அந்த மாமந்திரம் எனக்குத் தெரியும்' என்று சொன்னாரே? அதற்கு நான் சொன்னேன்—'திராவிட கழகத்தையும் முன்னேற்றக் கழகத்தையும் மோதவைப்பது பெரிய இராசதந்திரம் என்று காமராசர் கருதுகிறார்; நானும் ஒரு 6-மாத காலம் முயற்சி செய்தால் காமராசர் காங்கிரஸ் — கனையாளர் காங்கிரஸ்—என்று, இரண்டாக்கிக் காட்டமுடியும் என்று! அது நடந்தது; நான்செய்து அல்ல—தானாகவே நடந்தது!

(4-ம் பக்கம் பார்க்க)

**அறிவிப்பு**

புதிய காசு போதிய அளவு கிடைக்கப் பெறாத காரணத்தால், மறுஅறிவிப்பு வரையில் 'நம் நாடு' தனி இதழின் விலை வழக்கம்போல் 1-அணாவுக்கே விற்கப்படும்.

*நிர்வாகி: 'நம் நாடு*

நம் நாடு

சென்னை 13—4—57 சனி

# கோர விபத்து

இராம நவமி கொண்டாடுவதற்காக, புண்ணிய க்ஷேத்திரம் என்று கருதப்படும் பத்திராசலத்திற்கு, கோதாவரி நதியில் படகுகள் மூலம் பிரயாணம் செய்தவர்கள் கோர விபத்து ஒன்றில் சிக்கி, இருநூற்றுக்கு மேற்பட்டவர்கள் உயிரிழந்தனர் என்ற செய்தி தரும் சோகம் அளவிடற்கரியது.

தென்னாட்டில், இரண்டாண்டுகளுக்குள்ளாக ஏற்பட்டுவிட்ட பயங்கரமான விபத்துக்களுள் இது மூன்றாவதாகும். முதல் விபத்து மகபூப் நகர் அருகேயும், இரண்டாவது அரியலூரிலும் நிகழ்ந்த கோர இரயில் விபத்துக்களாகும். மூன்றாவதான இது படகு விபத்து.

இதுபோன்ற படகு விபத்துக்கள் இதற்குமுன் இதே கோதாவரியில் நிகழ்ந்திருக்கின்றன என்றாலும், அவை இத்தனை அதிகமான உயிர்களைப் பலிகொண்டதில்லை.

பத்திராசலம் சென்றுகொண்டிருந்த பிரயாணிகள், ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருந்த படகுகளில் ஒன்றிலிருந்து மற்றொன்றிற்கு தாவ முயற்சித்ததாயும் அதன் விளைவாகவே இந்த விபத்து நேர்ந்தது என்றும் கேட்க மிக வருத்தமாயிருக்கிறது.

இந்த விபத்துக்காளான மக்களின் உறவினர்கள், உற்றவர்களுக்கு, நாடு முழுவதுடன் சேர்ந்து நாமும் நமது ஆழ்ந்த அனுதாபத்தை உரித்தாக்குகிறோம்.

விபத்து குறித்து விசாரணை நடத்தப்படும் என்று, ஆந்திர முதன் மந்திரி சஞ்சீவ ரெட்டியார் கூறியிருப்பது, விபத்தில் தங்களது உற்றார், உறவினரைப் பறிகொடுத்துவிட்டவர்களுக்கு ஆறுதலளித்துவிட முடியாது.

இதற்கு முன் நடைபெற்ற இதுபோன்ற படகு விபத்துக்கள், குறிப்பிட்ட விழாக் காலங்களில் நதியில் படகுப் போக்குவரத்தை ஒரு சீருக்குக் கொண்டுவர பாடம் கற்றுத்தந்ததாகத் தெரியவில்லை. நடைபெறக்கூடிய விசாரணையில், இதற்கான காரண விளக்கம் கிடைத்தாக வேண்டும்.

ஒரு படகிலிருந்து மறு படகிற்குத் தாவிச் சென்றதால் விபத்து நிகழ்ந்தது என்று கூறப்பட்டாலும், அப்படி ஏன் பிரயாணிகள் நடந்துகொண்டார்கள் என்பதற்கு இரண்டு காரணங்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஒன்று, ஒரு படகுக்காரருடன் பிரயாணக் கட்டண விஷயத்தில் பிரயாணிகள் வளர்த்துக்கொண்ட தகராறு காரணமாக, மறுபடகில் பிரயாணம் செய்ய அவர்கள் விழைந்தனர் என்று கூறப்படுகிறது. மற்றொரு காரணம், குழந்தை ஒன்று கைதவறி நதியில் விழுந்துவிட்டதாகவும், அதனைக் காப்பாற்றுவதில் ஒரு படகிலிருந்தவர்கள் அளவு மீறி ஆர்ப்பாட்டம் செய்ததில் அந்தப் படகு கவிழும் நிலை அடைந்ததாகவும், அதனால்தான் அதிலிருந்த பிரயாணிகள், பிணைக்கப்பட்டிருந்த மற்றொரு படகிற்குத் தாவினார்கள் என்றும் கூறப்படுகிறது. இதில் எது உண்மை என்பது இனித்தான் தெரிய வேண்டும்.

எது எப்படியிருப்பினும், ஒன்றுமட்டும் தெரியவருகிறது. இந்தக் குறிப்பிட்ட விழாக் காலத்தில் படகுப் பிரயாணம் மேற்கொள்ளும் யாத்திரீகர்களின் எண்ணிக்கை அதிகமாகிறது என்பதும், அதனால், அளவுக்கு அதிகமான பிரயாணிகள் படகுகளில் ஏற்றிச் செல்லப்படுகிறார்கள் என்றும் கூறப்படுகிறது. இந்த நிலை நிச்சயம், விபத்துக்களுக்கான முக்கியக் காரணமாயிருப்பதில் வியப்பில்லை.

சர்க்கார், படகுத் துறைகளிலேயே சில பாதுகாப்பு அதிகாரிகளை நியமிப்பதின் மூலம், அளவுக்கு மீறி, படகில் பிரயாணிகள் ஏறுவதைத் தடுத்திருக்கலாம். இந்த நடைமுறை அமுலில் இருப்பதாகத் தெரியக் காணோம்.

மற்றுமொன்று, விழாக் காலங்களில் இதர 'க்ஷேத்திர'ங்களில் செய்யப்படுகிற சுகாதார முன்னேற்பாடுகளைப்போல இங்கும் ஆபத்து நேர்ந்தால் மீட்புக்கான முன்னேற்பாடுகளை தேவையான அளவு செய்து வைத்திருக்கலாம். இந்த ஏற்பாடு, விபத்து நேர்வதைத் தடுக்கப் பயன்படாவிட்டாலும், விபத்தினால் பலியாகக்கூடிய உயிர்களின் எண்ணிக்கையை கணிசமான அளவு குறைக்கப் பயன்படும் என்றே நம்புகிறோம்.

வெள்ளம் இல்லாத ஒரு நதியில் படகு கவிழ்ந்து நூற்றுக்கணக்கானோர் பலியாவது ஒரு சர்க்காருக்கு அதிர்ச்சியைத் தந்திருக்க வேண்டும். அந்த அதிர்ச்சியை உரிய வட்டாரங்களில் இன்னும் தெளிவாகக் காணமுடியாமலிருப்பது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது.

மேலும் இதுபோன்ற பெரும் நதிகளில் பாதுகாப்பான போக்குவரத்திற்கு வழி செய்வதினும்தான் இதுபோன்ற கோர விபத்துக்கள் தவிர்க்கப்படுவது இருக்கிறது.

# பன்றியும் முதலாளிகளும்

## குருஷ்சேவ் காட்டும் ஒப்புவமை

லண்டன், எப். 12—

"அரை சதவிகித வட்டிக்காக தந்தையையே கொன்றுவிடக்கூடிய மனிதர்கள் இந்த முதலாளிகள்! அவர்களால் ரஷ்யநாட்டு மக்களின் இதயத்தை ஒருபோதும் புரிந்துகொள்ளமுடியாது.

'எங்கள் நாட்டில் மக்கள், சொந்த இலாபத்திற்காக வாழ்வதில்லை; மாறாக, நாடு முழுவதின் முன்னேற்றத்திற்காக—எல்லா மக்களிடையவும் கலாச்சார வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்காக வாழ்கிறார்கள்.

"தனது சொந்தத்திற்கென சொத்து சுகம் சேகரிப்பதற்காக, ரஷ்யாவில் மனிதன் வாழ்வதில்லை. பொதுவான முன்னேற்றத்திற்காகவே பெரும்பான்மையான மக்கள் வாழ்கிறார்கள். இதனை எந்த ஒரு முதலாளியும் ஒரு போதும் புரிந்துகொள்ள மாட்டான்.

"பன்றி எப்படி வானத்தைப் பார்க்கமுடியாதோ, அப்படித்தான் முதலாளியும் எங்கள் மக்களின் மனோபாவத்தைப் புரிந்துகொள்ள முடியாது."

என்று விவசாய மாநாடு ஒன்றில் பேசுகையில் ரஷ்ய கம்யூனிஸ்டு செயலாளர் குருஷ்சேவ் கூறியதாக மாஸ்கோ வானொலி அறிவித்திருக்கிறதாம்.

## அநீதிக்கு முற்றுப்புள்ளி!

திருவனந்தபுரம், எப். 12—

கேரள மாநிலத்தில் பயிரிடும் நிலங்களிலிருந்தும், குடியிருப்புகளிலிருந்தும் சாகுபடியாளரை வெளியேற்றும் அநீதிக்குக் கேரளத்தில் முற்றுப்புள்ளி வைக்கப் பட்டுள்ளது.

வெளியேற்றும் எல்லா நடவடிக்கைகளையும் நிறுத்திவைக்க வேண்டுமென கவர்னரின் அவசரச் சட்டப் பிரகடனம் கூறுகிறது.

இந்த அவசரச் சட்டம் உடனடியாக அமுலுக்கு வருகிறது.

ஏற்கனவே எழுதப்பட்டுள்ள முச்சலிகைகள், பேச்சு மூலம் ஏற்படுத்திக்கொண்ட ஒப்பந்தங்களுக்கும் இந்தச் சட்டம் செல்லுமாம்.

## தொழில் அமைதி ஒப்பந்தம் ஏற்படுத்திக்கொண்டனர்

ஆல்வாய், எப். 12—

கேரள மாநிலத்தில் உள்ள திரு-கொச்சி கெமிகல் (பிரைவேட்) லிமிடெட் ஒரு முக்கியமான இரசாயன உற்பத்தித் தொழிற்சாலையாகும்.

இதில் பணியாற்றும் தொழிலாளர்களின் ஊதியம், எண்ணிக்கை, கிராக்கிப்படி முதலியன பற்றி தொழிலாளர் பிரதிநிதிகளுக்கும், கம்பெனி நிர்வாகிகளுக்குமிடையே இரண்டாண்டு காலத்திற்கு ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது.

## கிராக்கிப்படி உயர்வு கோரிக்கை எதிரொலி

### 20 ஆசிரியர்களுக்கு 'சீட்டு' கிழிந்தது

மைசூர், எப். 12—

இங்குள்ள பிலோமினா கல்லூரியைச் சேர்ந்த 20 ஆசிரியர்கள், இம்மாதத்தில் முதல் வேலையிலிருந்து நீக்கப்பட்டுள்ளதாகத் தெரியவருகிறது.

கிராக்கிப்படி உயர்வு பெறுவதற்காக சமீபத்தில் அவர்கள் வேலை நிறுத்தத்தை மேற்கொண்டதாகவும், அதை எதிர்த்த பள்ளி நிர்வாகிகள் இம்முடிவை மேற்கொண்டதாகவும் தெரிய வருகிறது.

இத்தகராறு பற்றி விசாரணை செய்ய ஒரு விசேட விசாரணைக் குழு நியமனமாகியிருக்கிறது.

## மகுடம் துறப்போர்

### பாதையில் மற்றொரு மன்னர்?

லண்டன், எப். 12—

ஜோர்தானில் சமீப காலமாக மன்னருக்கும் — அமைச்சரவைக்குமிடையே நிலவிய கருத்து வேறுபாட்டின் காரணமாக, ஜோர்தானின் எதிர்கால அரசியலில் இருள் சூழ்ந்துவிட்டதாகத் தெரியவருகிறது.

அமைச்சரவை, பதவியினின்றும் விலகிக்கொண்டுவிட்டது!

ஆனால், மன்னரின் எதிர்காலத்தைப் பற்றி பல புரளிகள் கிளம்பியுள்ளன.

அவர் அரண்மனையிலேயே சிறை வைக்கப்பட்டுள்ளாரென்றும், அவர் பல வாரங்களாகவே யாருக்கும் பேட்டியளித்ததாக தகவல் இல்லையென்றும், அவர் இருக்கும் அரண்மனையைச் சுற்றி முள்வேலிபோடப்பட்டுள்ளதென்றும், அவர் கொலை செய்யப்படலாம் என்ற அளவில் கருத்து நிலவுவதாகவும் அவர் முடிதுறக்கும்படி நிர்ப்பந்திக்கப்படுவார் என்றும் பிரிட்டிஷ் பத்திரிகைகள் செய்திகளைப் பிரசுரித்துள்ளனவாம்.

இராணுவத்தின் நடவடிக்கையைப் பொறுத்தே மன்னரின் எதிர்காலம் உள்ளதாகக் கூறப்படுகிறது.

## ஜெர்மன் விஞ்ஞானிகள் கலந்துகொள்ளவில்லை?

பெர்லின், எப். 10—

அணுசக்தியைப் பயன்படுத்தி ஆயுதங்களை உற்பத்தி செய்வது சம்பந்தமாக நடைபெற இருக்கும் ஆராய்ச்சிகளில், ஜெர்மன் நாட்டு விஞ்ஞானிகள் கலந்துகொள்ள மாட்டார்களாம்!

## சட்ட மன்றங்களின் முதல் கூட்டம்

மக்கள் சபை, மாநிலங்கள் சபைகளின் முதல் கூட்டம் வரும் மே திங்கள் 10-ம் நாள் நடைபெறுமாம்.

## சிறைக் கைதிகளிடை சட்ட அமைச்சர்

### அன்புடன் நடந்துகொள்ள அதிகாரிகளுக்குக் கோரிக்கை

திருவனந்தபுரம், எப். 10—

கேரள மாநிலத்தில் கைதிகளின் தண்டனையைக் குறைக்க அரசாங்கம் உத்தரவு பிறப்பித்ததின் விளைவாக 112 கைதிகள் விடுதலை செய்யப்பட்டுள்ளனர்.

சட்ட அமைச்சர் கிருஷ்ணய்யர் மத்திய சிறைக்குச் சென்று கைதிகளிடம் 'புதிய கேரள அரசாங்கம் ஏற்பட்டிருக்கிறது; அதனை நிர்மாணிக்க அனைவரும் உழைக்கவேண்டும்,' என்று கேட்டுக்கொண்டதுடன், கைதிகளிடம் அதிகாரிகள் அன்பாக நடந்துகொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொண்டுள்ளார்.

## 'அந்நிய நாடுகள் தலையிடுகள் கூடாது'

### சீன—போலந்து பிரதமர்கள் வற்புறுத்துகின்றனர்

பீகிங், எப். 12—

"காஷ்மீர் தகராறை இந்தியாவும் பாகிஸ்தானும் சமாதான முறையில் பேசித் தீர்த்துக்கொள்ளவேண்டும்; புதிய நெருக்கடிகள் ஏற்படுமளவுக்கு இதில் வெளிநாடுகளின் தலையீடு கூடாது" என்று, சீனப் பிரதமரும், போலந்து பிரதமரும் கூட்டாக வெளியிட்டுள்ள அறிக்கையொன்றில் குறிப்பிட்டுள்ளனர்.

'கோவா இந்தியாவைச் சேர்ந்ததே; அவ்வாறே டச்சு ஆதிக்கத்தின் கீழுள்ள மேற்கு ஐரியன் இந்தோனேஷியாவுக்குச் சேரவேண்டியதே; இவ்விரு பகுதிகளையும் காலனி நாடுகள் திரும்ப அவற்றிடம் ஒப்படைத்துவிட வேண்டும்,' என்றும் அறிக்கை வலியுறுத்தியிருக்கிறது.

## வடநாட்டு திட்டம் வளர்ச்சியுறுகிறது

### மத்திய ஆட்சி நிதி உதவி தரும் வேகம்

புதுடில்லி, எப். 10—

பீகார் மாநிலத்திலுள்ள கோசி திட்டத்திற்கு ஏற்கனவே அளிக்கப்பட்டுள்ள கடன் உதவியுடன் மீண்டும் 1956—57-ல் ரூ. 4,08,00,000 கடன் உதவியளிக்க மத்திய அரசாங்கம் இசைந்துள்ளது. இந்தத் தொகையுடன் மொத்தம் ரூ. 7,04,00,000 கடனாக மத்திய அரசு தந்திருக்கிறது.

இந்த கோசி திட்டத்தின் மொத்தச் செலவு 44,60,00,000 ஆகும்.

இந்த அணை கட்டிமுடிந்ததும் சுமார் 13,097 இலட்சம் ஏக்கர் நிலத்திற்கு நீர்ப்பாசன வசதி கிடைக்குமாம்.

வெள்ளத்தால் ஏற்படும் ஆபத்திலிருந்து 6,800 சதுரமைல்களில் குடியிருப்பவர்களுக்குப் பாதுகாப்பு தரக்கூடுமாம்.

## சென்னை சர்க்கார் அப்பீல் செய்யுமா?

சென்னை, எப். 12—

சிவில் நீதி மன்றங்களில் மாநில அமைச்சர்கள் ஆஜராவதிலிருந்து விலக்கு அளிக்கும் விதி இந்திய அரசியல் சட்டத்தின் 14-வது பிரிவுக்கு முரண்பட்டதென்றும், அது செல்லாதென்றும் சமீபத்தில் சென்னை உயர்நீதி மன்றம் அளித்த தீர்ப்பை எதிர்த்து இந்திய உயர்நீதி மன்றத்தில் (சுப்ரீம் கோர்ட்) அப்பீல் செய்வதற்கான விசேட அனுமதி கோரிக்கை மனு தாக்கல் செய்வதற்கு இந்திய அரசாங்கத்தை சென்னை சர்க்கார் கேட்டுக்கொள்ளுமென்று தெரியவருகிறது.

# நெல்லிக்குப்பத்தில் கம்யூனிஸ்டு அட்டகாசம்!

## கழகத் தோழர் தாக்கப்பட்டார்

நெல்லிக்குப்பம், எப். 11—

இன்று மாலை 5-15 மணியளவில் ஈ. ஐ. டி. தொழிற்சங்கத் திடலில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

தொழிற்சங்கத் துணைச்செயலாளர் கோவிந்தசாமி பேசிக்கொண்டிருக்கையில் சில கம்யூனிஸ்டுத் தோழர்களும், அனுதாபிகளும் எழுந்து பல கேள்விகளைக் கேட்டு கூட்டம் மேற்கொண்டு நடைபெறாதபடி குழப்பம் உண்டாக்க முயற்சித்தனர்.

அதுபோது தி. மு. கழகத் தோழர் மு. சக்கரபாணி அவர்கள், கம்யூனிஸ்டுத் தோழர்களை நோக்கி, 'தனித்தனியாகக் கேள்விகள் கேட்கப்பட்டால் பதிலும் தரப்படும் — கூட்டம் நல்ல முறையில் நடைபெறும்' என்று கூறினார்.

உடனே அங்கிருந்த கம்யூனிஸ்டுத் தோழர்களான கோவிந்தசாமி, வெங்கிடேசன், வேணு, பழனிச்சாமி முதலியவர்களும், மற்றும் கம்யூனிஸ்டு அனுதாபிகளும் கழகத் தோழரை ஒருமுகமாகத் தாக்கினர்; தடுக்கப்போனவர்களும் தாக்கப்பட்டனர்.

இதனால், தோழர் சக்கரபாணிக்குக் கண்ணின் கீழ் பலத்த காயம் ஏற்பட்டு மருத்துவரிடம் சிகிச்சை பெற்றுவருகிறார்.

போலீசார் விரைந்துவந்து அமைதியை நிலைநாட்டினர்; கூட்டம் நடைபெறாமல் குழப்பத்திலேயே முடிவுற்றது.

இச்சம்பவம் நகரில் பலத்த பரபரப்பை ஏற்படுத்தியிருக்கிறது. தோழர் சக்கரபாணியின் சார்பில் போலீசில் புகார் செய்யப்பட்டிருக்கிறது. இவ்வளவு நடந்தபோதிலும் நமது இயக்கத்தோழர்கள் கண்ணியத்துடன் நடந்துகொண்டனர். (ந. நி.)



## 'தினத் தந்தி'க்கு மறுப்பு

திருத்துறைப்பூண்டி தி. மு. க. கிளையின் உறுப்பினராகிய நான் டில்லி மக்கள் சபை—நாகப்பட்டினம் (பொது) தொகுதிக்கு தி. மு. கழக அபேட்சகராகப் போட்டியிட்ட, தோழர் கி. மனோகரன் அவர்களுக்காக இரவு பகல் பாராது கடுமையாக வேலை செய்ததால் உடல்நலங் குன்றிவிட்டது; அதனால் மொட்டை அடித்துக்கொண்டேன். உண்மை இவ்வாறுள்ளபோது, 5—4—57 'தினத்தந்தி' 2-ம் பக்கம் 2-ம் பத்தியில் 'இராமமூர்த்தி தோற்றதால் வாலிபர் மொட்டை' என்ற தலைப்பிட்டுக் கூறியுள்ள செய்தியில், நானும் பக்கிரிசாமி என்பவரும் 'காங்கிரஸ் அபேட்சகர் வெற்றி பெறுவாரா? அல்லது, இராமமூர்த்தி வெற்றி பெறுவாரா?' என்று நிபந்தனை போட்டுக் கொண்டதாயும், நிபந்தனையின்படி நான் மொட்டையடித்துக்கொண்டதாகவும் திரித்து வெளியிடப்பட்டிருக்கிறது; இச்செய்தியை மறுத்து 'தினத் தந்தி'க்கு ஒரு மறுப்பு அனுப்பியுள்ளேன்," என்று திருத்துறைப்பூண்டித் தோழர் ஜானி பாட்சா எழுதியிருக்கிறார்.

# இராமநாதபுரம் மாவட்ட அயல்நாடு செல்லும் பிரயாணிகள் சங்கம்

## சென்னை-இரங்கூன் கப்பல் போக்கு-வரத்தை புதுப்பிக்கக் கோரிக்கை

சென்னை, எப். 12—

டில்லி சர்க்கார் அதிகாரிகளைச் சந்தித்து, சென்னை—இரங்கூன் கப்பல் போக்கு-வரத்தினை மீண்டும் துவங்குமாறு வற்புறுத்துவதற்காக இராமநாதபுரம் மாவட்ட அயல்நாடு செல்லும் பிரயாணிகள் சங்கத்தவர், தோழர்கள் ஆறுமுகம் சேர்வை, இப்ரகீம் ஆகிய இருவரையும் டில்லிக்கு அனுப்புவதென முடிவு செய்திருக்கின்றனர்.

### சங்க அமைப்பு

இராமநாதபுரம் மாவட்ட அயல் நாடு செல்லும் பிரயாணிகள் கூட்டம் ஒன்று, கடந்த ஏப்ரல் முதல் தேதியன்று நடைபெற்றது.

அந்தக் கூட்டத்தில், பிரயாணிகளின் நலன் காப்பதற்காக ஒரு சங்கம் நிறுவப்பட்டது.

திரு. எஸ். ஆறுமுகம் சேர்வை அவர்கள் தலைவராகவும், ஆப்பனூர் ஏ. எஸ். காஜா முகையதீன் அவர்கள் துணைத் தலைவராகவும், முதுகுளத்தூர் ஆர். எம். அலியார் அவர்கள் பொதுச்செயலாளராகவும், செய்யது இப்ரகிம் செயலாளராகவும், அப்துல் காதர் துணைச் செயலாளராவும், என். எஸ். முகம்மது உசேன் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டதுடன், ஒரு செயற்குழுவும் நிறுவப்பட்டது. (ந. நி.)

## காங்கிரசின் சொல் வேறு - செயல் வேறு!

பம்பாய், எப். 12—

தேர்தலுக்குப் பின்னர், காங்கிரசின் செயலாளரான ஸ்ரீமன் நாராயணன் மாநில அமைச்சர்களைப் பற்றிக் குறிப்பிடுகையில், 'அவசியமில்லாத இலாகாக்களை உண்டாக்கி, அதிகம் பேர் கொண்ட அமைச்சரவை இந்தத் தடவை இருக்காது' என்று குறிப்பிட்டுவிட்டு, 'கூடுமான வரையில் குறைந்த எண்ணிக்கையுள்ளவர்களே அமைச்சரவையில் இருப்பார்கள்' என்று தெரிவித்தார்.

பம்பாய் மாநிலத்தில் காங்கிரஸ் சட்டசபைக் கட்சியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள சாவன், பம்பாய் அமைச்சர் அவைக்கு மொத்தம் 14 பேர்கள் கொண்ட பட்டியலை அறிவித்துள்ளார்.

இதுபோதாதென்று 12 துணை அமைச்சர்களின் பெயர்களையும் வெளியிட்டுள்ளார்.

# 123 கோடி டன் இரும்பை வெட்டியெடுக்க கோவைத் தென்னவருக்கு அனுமதியாம்

## எஸ். வி. இராமசாமி ஒப்புகிறார்

### சேலத்திற்கு எதிர்காலத்தில் கிடைக்ககூடுமென மழுப்புகிறார்

சேலம், எப். 12—

இரும்பு உருக்குத் தொழிற்சாலை சேலத்தில் நிறுவப்படும் என்றே தான் நம்புவதாகவும் இது விஷயமாக தாம் நெடுநாட்களாக வற்புறுத்தி வருவதாகவும், சேலத்தில் 123 கோடி டன் இரும்பு கனிப் பொருள்கள் கிடைப்பதை வெட்டியெடுக்க கோவையைச் சேர்ந்த ஒரு தனிப்பட்ட நிறுவனத்திற்கு அனுமதி கிடைத்துவிட்டதால், சேலத்திற்கு இல்லை என்று அர்த்தமாகாது என்றும் இங்கு நடைபெற்ற பொதுக் கூட்டமொன்றில் எஸ். வி. இராமசாமி கூறியுள்ளார்.

## ரஷ்ய மாணவர்கள் தமிழ் கற்கின்றனர்!

### லெனின் கிராட் பல்கலைக் கழகத்தில் திருக்குறள்!

திருநெல்வேலியைச் சேர்ந்த பள்ளி மாணவி பாக்கியம், லெனின் கிராட் பல்கலைக் கழகத்தின் கீழ்த்திசைப் பிரிவில் தமிழ் மொழி பயின்றுவரும் ரஷ்ய மாணவர்களுக்கென பல தமிழ்ப் பாட புத்தகங்களையும், குழந்தைகளுக்கான கதைப் புத்தகங்களையும், பாரதியின் வசன - கவிதை நூல்களையும், தொன்மை நூல் திருக்குறளையும் — அதற்கான உரையையும் லெனின் கிராட் பல்கலைக் கழகத்தின் மூலம் அனுப்பியிருப்பதாகச் செய்தி தரப்பட்டிருக்கிறது. இவ்வரிய நூல்கள் யாவும் இப்பொழுது லெனின்கிராட் பல்கலைக் கழகத்தின் நூல் நிலையத்தில் வைக்கப்பட்டுள்ளன.

மாணவி பாக்கியத்தின் அன்பளிப்பிற்கு லெனின் கிராட் பல்கலைக் கழக மாணவர்கள் நன்றி தெரிவித்திருப்பதுடன், பல ரஷ்ய நூல்களின் ஆங்கில மொழி பெயர்ப்பையும், அம்மாணவிக்கு அன்பளிப்பாக அனுப்பியுள்ளனர்.

## குடும்பக் கலைக் கல்லூரி

### கோவையில் துவங்கப்படுமாம்

கோவை, எப். 12—

கோவையில் அவினாசிலிங்கம் நிதி நிறுவனத்தின் ஆதரவில் வரும் ஜூலைத் திங்கள் முதல் குடும்பக் கலைக் கல்லூரி துவங்கப் படுமாம்.

உணவு, ஆகாரச் சத்து, உடை, துணி வகைகள், துணி சலவை செய்தல், சுகாதாரம், உடல் நலம், குழந்தை வளர்ப்பு, சமூகத்தில் பழகும் பண்புகள் முதலியன பற்றி இக்கல்லூரியில் போதிக்கப்படுமாம்.

இந்தக் கல்லூரியில் 150 மாணவிகள் ஆரம்பத்தில் சேர்த்துக் கொள்ளப்படுவார்கள் என்றும், சென்னை மாநிலத்தில் இரண்டு கல்லூரிகளில் மட்டுமே இந்தக் குடும்பக் கலை கற்பிக்கப்படுகிறது என்றும் தகவல் தரப்பட்டிருக்கிறது.

## சென்னை - விழுப்புரம் மின்சார ரயில் திட்டம்

### பிரெஞ்சு நிபுணர்கள் பரிசிலனை

புதுடில்லி, எப். 12—

சென்னையிலிருந்து விழுப்புரம் வரை மின்சார இரயில் பாதை அமைக்க இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் உத்தேசிக்கப்பட்டுள்ளதல்லவா? இதைப் பற்றி பிரெஞ்சு நிபுணர்கள் நடத்திய 'துப்புறவு' முடிந்துவிட்டதாம். திட்டத்தைக் குறைந்த செலவில் நிறைவேற்றவும் யோசனைகள் கூறியுள்ளனராம்.

மின்சார இரயில் பாதை அமைப்பு வேலை அடுத்த நிதி ஆண்டில் ஆரம்பமாகும் என்று தெரியவருகிறது.

இதற்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 3,68,00,000 ஒதுக்கப்பட்டிருக்கிறது.

## பருத்தி ஏற்றப்பட்ட இந்தியக் கப்பலில் தீ!

### 6 - மணி நேரம் போராடி தீயை அணைத்தனராம்

சூயஸ், எப். 11—

சூயஸ் துறைமுகத்தில் பருத்தி ஏற்றப்பட்ட 'ஜல வல்லப்' என்ற இந்தியக் கப்பலில் தீப்பிடித்துக் கொண்டதாம். மற்ற கப்பல்களுக்கு இந்தத் தீ பரவாமல் இருக்க கப்பலை துறைமுகத்துக்கு வெளியே கொண்டு சென்றனராம்.

சூயஸ் கால்வாயின் தீயணைக்கும் படையினர் 6 மணி நேரம் போராடி தீயை அணைத்தனராம். ஏற்பட்டுள்ள நஷ்டத்தை இன்னும் மதிப்பிடவில்லை என்று தெரியவருகிறது.

## 'போர்' தந்த பலன்!

சூயஸ் கால்வாயில் ஏற்பட்ட தடைகளைநீக்கி, மீண்டும் போக்குவரத்திற்கு ஏற்றதாகச் செய்ய மொத்தம் 150 இலட்சம் டாலர் (ஒரு டாலர் சுமார் ரூ. 4-12-0 மதிப்பு ஆகும்.) செலவிடப்பட்டுள்ளதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறதாம்.

மராமத்து வேலைக்காக ஆரம்பத்தில் 400 இலட்சம் டாலர் செலவாகும் என்று மதிப்பிடப்பட்டது நினைவிருக்கும்.

முழு விவரத்தையும் ஐ. நா. வெளியிடும் என்று தெரிகிறது.

# பொன்மலையில் தி. மு. கழகக் கட்டிடம் வாங்க நிதியளிப்பு

15—4—57 திங்கள் மாலை 5-30 மணிக்கு, தி. மு. கழகச் சார்பில் வெற்றி பெற்ற சட்டசபை, பாராளுமன்ற உறுப்பினர்களுக்குப் பாராட்டு விழா பொன்மலைப் பட்டி வ. உ. சி. திடலில் நடைபெறும். அதுபோது, பொன்மலையில் கழகத்திற்குக் கட்டிடம் வாங்கித்தருவதற்காக 'அண்ணா' அவர்கள் முன்னிலையில், பொதுச்செயலாளர் 'இரா. நெடுஞ்செழியன்' அவர்களிடம் பொன்மலை திராவிட வாலிபர் கழகம் பி - பார்டிக்குச் சொந்தமான ரூ. 4,250 நிதியாக வழங்கப்படும்"

என, கழகச் செயற்குழுவால் முடிவு செய்யப்பட்டிருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். என்று, செயலாளர் ஏ. கோவிந்தசாமி அறிவிக்கிறார்.

## தி. க. தோழர்கள் விலகுகின்றனர்!

"கடலூர் ஓ. டி. திராவிடக் கழகத் தலைவரும், கடலூர் பகுத்தறிவுக் கழகத் தலைவரும், கடலூர் நகராண்மைக் கழக உறுப்பினரும், தென்னாற்காடு மாவட்ட திராவிடக் கழக செயலாளருமான தோழர் கே. எம். வேலு அவர்கள், 1—4—57-லிருந்து திராவிடக் கழகத்திலிருந்து விலகி, கடலூர் நகர திராவிட முன்னேற்றக் கழகத்தில் சேர்ந்துவிட்டார்"

என்று, கடலூர் நகர தி. மு. கழக செயலாளர் தோழர் கி. கோவிந்தராசன் அறிவிக்கிறார்.

* * *

"5 ஆண்டுகளுக்கு மேலாக தி. க.-வில் உறுப்பினராக இருந்துவந்த நான்—கடந்த பொதுத் தேர்தலில் பெரியார் கையாண்ட நடைமுறை கண்டு மனம் புண்பட்டு, தி. கழகத்திலிருந்து விலகிவிட்டேன். தி. மு. கழகத்தில் உறுப்பினராகச் சேர முடிவு செய்துள்ளேன்,"

என்று, கல்லிடைக்குறிச்சி தோழர் சே. பலவேசம் அறிவிக்கிறார்.

* * *

"திராவிட கழகத்தின் இன்றைய போக்கும்—நடைமுறையும் எனக்குப் பிடிக்காத காரணத்தால் தி. க.-விலிருந்து விலகிக்கொண்டு 11—4—57 லிருந்து தி. மு. கழகத்தில் சேர்ந்துவிட்டேன்,"

என்று, சேலம்—ஆத்தூர் நகர தோழர் டி. வி. அந்தியப்பன் அறிவிக்கிறார்.

## கைத்தறியின் நிலை

சென்னை, எப். 10—

1956-57-ம் ஆண்டு கைத்தறி 'செஸ்' நிதியில் ஒதுக்கப்பட்ட தொகையில் 92 சதவிகிதத்தை சென்னை அரசாங்கம் பயன்படுத்திக் கொண்டிருப்பதாக அறிவித்துள்ளது.

இந்த ஆண்டிற்கு ரூ. 2,25,51,000 ஒதுக்கப்பட்டுள்ளதாம்.

கூட்டுறவு இயக்கத்தின் கீழ் 28,000 தறிகள் கொண்டுவரப் பட்டுள்ளதாம். மாநிலத்தில் உள்ள 4½ இலட்சம் தறிகளில் 1,80,000 தற்போது தறிகள் கூட்டுறவு இயக்கத்தின்கீழ் இயங்குகிறதாம்.

தற்சமயம் ஆண்டுக்கு 35 கோடி கெசம் கைத்தறித்துணி உற்பத்தி செய்யப்படுகிறதாம்.

ஏராளமான சரக்கு விற்பனையில்லாமல் தேங்கியுள்ளதாம்.

வெளிமார்க்கெட் சங்கடங்கள் அதிகரித்து வருகிறதாம்.

கூட்டுறவுச் சங்கங்களில் நிறைய துணிகள் உள்ளன என்றும் கூறப்படுகிறது.

## 'பெருச்சாளிகள்' கைது!

### நகர சபை சொத்துக்களை மோசடி செய்த அதிகாரிகள்

கல்கத்தா, எப். 12—

இரண்டாவது உலகப் போர் நடைபெற்றபோது விநியோகிக்கப்பட்ட 1,800 ஏ. ஆர். பி. குழாய்க் கிணறுகளை விற்றுப் பணத்தை கையாடி விட்டதாக, கல்கத்தா நகர சபையைச் சேர்ந்த 18 பேர் கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

இந்த மோசடியில் 3 உயர்தர அதிகாரிகள், 6 இன்ஸ்பெக்டர்கள், மற்றும் 8 பேர் உள்ளனர்.

கல்கத்தா நகர சபைக்குச் சொந்தமான சொத்தில், பல இலட்சம் மதிப்புள்ள ரூபாய்களைக் கையாடல் செய்து மோசடி செய்ததாக இவர்கள் மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது.

## சுய ஆட்சி பாதையில் மடகாஸ்கர்!

### பிரெஞ்சு மாநிலங்களும் சுயஉரிமை பெறுகின்றன

பாரிஸ், எப். 12—

ஆப்பிரிக்காவில் மேற்குப் பகுதியிலும், பூமத்திய ரேகைக்கு அருகிலுமுள்ள 12 பிரெஞ்சு ராஜ்யங்களுக்கும், மடகாஸ்கருக்கும் பெரும் அளவுக்கு சுயஆட்சி வழங்கும் பிரகடனம் வெளியிடப்பட்டுள்ளது. இதன் மூலம் இரண்டரை கோடி மக்களுக்கு உள்நாட்டு சுயாட்சி கிடைக்கிறது.

ஆனால் இராணுவம், வர்த்தகம் மட்டும் பிரெஞ்சு வசமே இருக்குமாம்.

## அரசாங்க ஊழியர்கள் மீது பாய்ச்சல்!

### ஒழுக்க விதிகளைக் காட்டி பழி வாங்க முடிவு?

சென்னை, எப். 12—

சென்னை அரசாங்க ஊழியர்கள் தங்கள் நலனுக்காக அரசியல், மற்றும் வெளிவட்டாரங்களின் ஆதாரவைத் தேடும் வகையில், வரவர அதிகமாக முனைந்துள்ளனர் என்று சென்னை அரசாங்கம் கண்டுபிடித்துள்ளதாம்.

மேல் அதிகாரிகளை வற்புறுத்தும் செயல்களில் ஊழியர்கள் ஈடுபட்டுள்ளதாகவும் அரசாங்கத்திற்குத் தெரிய வருகிறதாம்.

இது அரசாங்கஊழியர் ஒழுங்கு கட்டத்தின் 24-வது விதிக்கு முரண்பட்டதாகும் என்றும், அத்தகையவர்களுக்கு உத்தியோக உயர்வை குறிப்பிட்ட காலத்திற்கோ, நிரந்தரமாகவோ, நிறுத்திவைக்க அரசாங்கத்திற்கு உரிமையுண்டு என்பதையும் சுட்டிக் காட்டி, சென்னை சர்க்கார் பொது இலாகா அறிக்கை ஒன்று வெளியிட்டிருக்கிறது.

மேலும், பல்வேறு இலாகாத் தலைவர்கள், தங்கள் கீழ் பணியாற்றும் ஊழியர்கள் கவனத்திற்கு இதைக் கொண்டு வரவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறது.

எதிர்காலத்தில் இந்த சட்டத்தை மீறுபவர்கள்மீது தக்க நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் எச்சரிக்கப்பட்டுள்ளது.

## சிக்கலைத் தீர்க்க டில்லியின் சிந்தனை!

பம்பாய், எப். 12—

'புதிய காசு' — தசாம்ச முறையை இந்தியப் பேரரசு கொண்டுவந்ததின் விளைவாக 'தெலைபேசி' இலாகாவிற்கும் சிக்கல் ஏற்பட்டுள்ளதல்லவா?

இதுவரையில் பழைய நாணய முறையில் இரண்டணாவைப் போட்டு தொலை பேசியில் பேச முடிந்தது. புதிய காசு முறையில் 12½ காசுகளைப் போடவேண்டியிருக்கிறது.

இந்தப் புதிய சிக்கலைப் பற்றி ஆராய்ந்து புதிய காசுகள் முறையில் நாணயத்தைப் போடுவதற்கான ஏற்பாடுகள் செய்வதுபற்றி இந்தியப் பேரசு முடிவு செய்யுமென்று கூறப்பட்டிருக்கிறது.

## ஏய்த்தவர் தப்பித்துக் கொள்ள முடியாது!

சென்னை, எப். 12—

ஒரு குறிப்பிட்ட காலத்தில் பெரும் அளவுக்கு வருமான வரி செலுத்தாமல் தப்பித்துக்கொண்டவர்களுக்கு மீண்டும் வரி விதிக்கலாம் என்றும், வருமான வரி விதிப்புக்கு செய்யப்பட்ட திருத்தம் செல்லுபடியாகும் என்றும் சென்னை நீதிபதிகள், 'ரிட்' மனு ஒன்றில் தீர்ப்பளிக்கையில் குறிப்பிட்டுள்ளனர்.

முகவரி:
க. அறிவழகன்,
10, வேளாளர் தெரு,
புரசைவாக்கம்—சென்னை-7.

# ஏழை எளியோர் சிந்தும் வியர்வைத்துளிகள்

## வரிப்பணத்தில் ரூ. 55 இலட்சம் பாழ்!

### அரை மனிதர்களை முழு மனிதர்களாக்க என்றுகூறி இந்த அநியாயம்

### டெல்லிப் பெரியவர்களின் ஆளுந்திறனுக்கு மற்றுமோர் அத்தாட்சி!

**"ஆடையில்லாத அரைமனிதர்களை அநியாய விலை தந்தேனும் முழு மனிதர்களாக்கப் போகிறோம்' என்று கூறிவிட்டு, அரைமனிதர்களுக்கு ஆடைகள் வழங்காதது மட்டுமல்ல—அந்த அரை மனிதர்களின் வரிப்பணத்தில் 55-இலட்சம் ரூபாயை பாழடித்திருக்கிறார்கள் டெல்லிப் பெரியவர்கள்!**

*மக்கள் சபையின் பொதுக் கணக்குக் குழு, இந்த அநியாயம் பற்றிய தகவலைத் தந்திருக்கிறது.*

#### ஜப்பான் துணி

"ஜப்பான் துணி ஏற்றுமதி—இறக்குமதியில் டெல்லி சர்க்கார், 55-இலட்சம் ரூபாயைக் கொள்ளை கொடுத்திருக்கின்றனர்"

என்று, மக்கள் சபை பொதுக் கணக்குக் குழுவினர், தங்கள் அறிக்கையில் கூறியுள்ளனர்.

#### 1946-ல்

1946-ம் ஆண்டில், இந்த நஷ்டம் ஏற்பட்டதாம்!

#### அரை மனிதர்கள்!

"இந்தியாவில் வாழும் இலட்சோப இலட்சம் ஆடையில்லா அரை மனிதர்களுக்கு ஆடை தர வேண்டியதே நோக்கம்; இதற்காக எத்தனை விலைகொடுத்தேனும் துணி இறக்குமதி செய்வது என்று டில்லி சர்க்கார் முடிவு செய்தார்களாம்!

அதற்காக, அமெரிக்க டாலர்களாகத் தந்து ஜப்பானிலிருந்து துணி இறக்குமதி செய்தார்களாம்!

தகவலைத் தரும் குழு, 'அரை மனிதருக்கு ஆடை தருவது என்று கூறி இறக்குமதி செய்யப்பட்ட துணியில் ஒரு கெசம்கூட இந்தியாவில் விற்கப்படவில்லை' என்றும், 'மாறாக வேறு நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது' என்றும் கூறியிருக்கிறது.

#### தெரியவில்லை?

மேலும் குழு கூறுகிறது:—

"உண்மையில், நிர்வாணமான மக்களுக்காகத்தான் துணி இறக்குமதி செய்யப்பட்டது என்றால், அந்தத் துணி எப்படி இத்தனை அதிக விலைக்கு விற்கப்பட முடியும் என்பது தெரியவில்லை?

"இறக்குமதியான துணியில் ஒரு கெசம்கூட இந்தியாவில் விற்கப்படவில்லை என்பது இதில் முக்கியமான அம்சம்.

#### அலட்சியம்

"இது சர்க்காரின் அலட்சியப் போக்கையே—சிந்தனையற்ற போக்கையே காட்டுகிறது; அத்துடன், இதனால் சர்க்காருக்கு பெருந்தொகை நஷ்டமாகியிருக்கிறது"

#### ரூ. 6-இலட்சம்!

"இந்தத் துணி பேரத்தில் ஈடுபட்ட பம்பாய் நிறுவனம் ஒன்று, சர்க்காருக்குத் தர வேண்டியிருந்த 15-இலட்சம் ரூபாய்க்கு, 6 இலட்சம் ரூபாய் மட்டுமே தர ஒப்பியதாம்!

#### இதுகூட!

இதுகூட, பொதுக் கணக்குக் குழுவினர் ஏற்பாடு செய்த விசாரணை மற்றும் நடவடிக்கைகளுக்குப் பிறகே கிடைத்ததாம்!

#### நீதிபூர்வ விசாரணைக்கு மறுப்பு

இந்தத் துணி பேரத்தால், சர்க்காருக்கு ஏற்பட்டுள்ள நஷ்டம் குறித்து நீதிபூர்வ விசாரணை நடத்தவேண்டும் என்ற கணக்குக் குழுவின் சிபாரிசை ஏற்க சர்க்கார் மறுத்துவிட்டதாம்!

"மேலும் இந்தப் பேரத்தில் தொடர்புகொண்ட டில்லி சர்க்கார் அதிகாரிகள் சிலர் மீதும் நடவடிக்கை எடுக்க வேண்டுமென குழு தெரிவித்த சிபாரிசும் சர்க்காரால் ஏற்கப்படவில்லையாம்!

## கழகக் கூட்டங்கள்

★

**தென்திருப்பேரை:**
16-4-57 இரவு 7-30 மணிக்கு
தி. மு. கழக 6-வது ஆண்டுவிழா
பேசுவோர்:
கே. எஸ். பன்னீர்செல்வம்
கே. ஆர். பி. மணிமொழியன்

★

**உடையார்பாளையம்—ஆயுதகளம்:**
16—4—57 மாலை 5-மணிக்கு
தி. மு. கழகத் துவக்கவிழா
தலைவர்: கோ. இராகவன்
பேசுவோர்:
நாஞ்சில் கி. மனோகரன்
ரெத்தினபாலகுருசாமி
சிறுமி இளங்கோ

★

**மேட்டூர்—கருமலைகூடல்:**
மாரியம்மன் கோவில் மைதானம்
15—4—57 மாலை 6½ மணிக்கு
தி. மு. கழகத் துவக்கவிழா
பேசுவோர்:
ப. கண்ணன்
ப. செல்லப்பன்
அ. பாவு
க. கு. சின்னுசாமி

## அண்ணா சொற்பொழிவு

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

"இத்தேர்தலில் நம்மை எதிர்த்ததுபோல் உலகத்தில் வேறெந்தக் கட்சிக்கும் இவ்வளவு எதிர்ப்பு இருந்ததில்லை. காங்கிரஸ் நம்மை எதிர்த்தது; கம்யூனிஸ்டுக் கட்சியினர் நம்முடன் கூட்டுச் சேரவில்லை; பி. சோ. கட்சியினருக்கும் நமக்கும் சமரசம் இல்லை; திராவிட கழகம் நம்மைத் தீப்பொறி பறக்கப் பேசிற்று; பணக்காரர் நம்மைப் பகைவர்களாகக் கருதினர்; மதவாதிகள் மருட்சியுடன் நம்மை அணுகினர்; பார்ப்பனர் நம்மைச் சேர்த்துக் கொள்ளவில்லை. இவ்வளவு எதிர்ப்புகளுக்கும் இடையில் தி. மு. கழகம் ஈடுபட்டு ஒரு துளியும் தனது மன அமைதியைக் குலைத்துக்கொள்ளாமல், ஒரு துளியும் ஆத்திரத்திற்கு இடம் அளிக்காமல், திட்டுகிறவர்களைப் பதிலுக்குத் திட்டாமல், பழிக்கிறவர்களைப் பதிலுக்கு பழிக்காமல். 'எதையும் தாங்கும் இதயம் வேண்டும்,' என்று நாம் சொல்லும் இலட்சியம் உண்மையிலேயே பொருளுடைய இலட்சியம் என்பதை நடத்தையில் காட்டி, 15 இடங்களைப் பெற்றோம் என்றால், 'வசிட்டர்' போன்றவர்கள் நம்மைப் 'பிரம்மரிஷி'கள் என்று பாராட்டத்தான் செய்வார்கள்.

"பாராட்டப்படும் அதே நேரத்தில், நாம்பட்ட கஷ்டநஷ்டங்கள் அனைத்தும் அந்தப் பாராட்டின் மூலம் துடைக்கப்படுகிறது என்று நானும் கருதுகிறேன்—நம்மை அறிந்த நண்பர்களும் பெருமையாகத்தான் கருதுகிறார்கள்."

#### சென்னை, முத்தமிழ்மன்றம்

14—4—57 காலை 10 மணிக்கு, மேற்படி மன்றப் பொதுக் குழு உறுப்பினர்கள் கூட்டம் நடைபெறும்; மன்ற 3-வது ஆண்டு விழா நடத்துவது பற்றி ஆராயப்படும்.

## 'உத்தரவுகள் மூலம் உணவுத் தானியங்கள் விளையாது'

### அவ்வப்போது அரசாங்கம் பிறப்பிக்கும் உத்தரவுகளின் இலட்சணம் பற்றி அமைச்சர்

கடலூர், ஏப். 12—

"உணவுத் தானியங்கள் காகிதத்திலுள்ள உத்தரவுகளினால் உற்பத்தியாவதில்லை; அவை வயலில் தான் உற்பத்தியாகிறது. நோயாளிகள் வருவதற்காக காத்துக்கொண்டிராமல் நோயாளிகள் இருக்குமிடத்திற்கே சென்று மருத்துவம் செய்யும் டாக்டர்களைப் போன்று, திட்ட அதிகாரிகளும் கிராமங்களுக்குச் சென்று மக்களுக்குத் தொண்டாற்ற முனையவேண்டும்."

மேற்கண்டவாறு இந்திய அரசாங்க சமுதாய அபிவிருத்தித் திட்ட அமைச்சர் எஸ். கே. டே, இங்குள்ள நகரசபைத் தலைவர் தலைமையில் நடைபெற்ற கூட்டமொன்றில் பேசுகையில் குறிப்பிட்டுவிட்டு, மேலும் கூறியதாவது:—

"இன்றைய வேலைத் திட்டங்கள் நிறைவேற்றப்படாமல் இருப்பதற்கு அரசாங்கம் அவ்வப்போது பிறப்பிக்கும் உத்தரவுகளே முக்கியத்தடையாக உள்ளது" என்று அவர் எடுத்துரைத்துள்ளார்.

"உத்தியோகப் பற்றில்லாதவர்களும், சட்டசபை உறுப்பினர்களும் தங்கள் செல்வாக்கைப் பயன்படுத்தி அரசாங்க உத்தரவுகளை ஒழித்துவிட்டு, பஞ்சாயத்து உத்தரவுகளை அமுலாக்கப் பாடுபடவேண்டும்," என்றும் அவர் கூறியுள்ளார்.

விஸ்தரிப்பு வேலையில் ஈடுபட்டுள்ள அதிகாரிகளைப் பற்றி அவர் குறிப்பிட்டுப் பேசுகையில், அதிகாரிகள் வெளியே சென்று வேலைகள் எப்படி நடைபெறுகின்றன என்று நேரில் மேற்பார்வையிட வேண்டும் என்றும், தீவிரமான பிரச்சாரமும் செய்ய முனைய வேண்டும் என்றும், பொதுமக்களிடம் ரொக்கமாகவோ, உழைப்பின் மூலமோ உதவியைத் தேடுவதற்கு அதிகாரிகள் பொறுப்பேற்று நடந்துக்கொள்ள வேண்டும் என்றும், இந்தப் பணிகளைச் செய்யாதவர்கள் இலாயக்கற்றவர்கள் என்றும், மக்களின் ஒத்துழைப்பின் மூலமே ஒரே நாளில் ரூ. 1 இலட்சம் மதிப்புக்கு உதவி பெறமுடியும் என்றும் எடுத்துரைத்தார்.

## சமூக நல, தேசீய விஸ்தரிப்பு திட்டங்கள்

### தமிழ்நாட்டில் அமுலாகும் இலட்சணம்

#### மத்திய மந்திரி தரும் சான்றிதழ்

கடலூர், ஏப். 12—

சமுதாய நலத் திட்டங்கள், தேசிய விஸ்தரிப்புத் திட்டங்கள் இவை எல்லாம் தமிழ் நாட்டில் நிறைவேற்றப்படும் இலட்சணம் குறித்து, மத்திய சமுதாய நலத் திட்ட இலாகா மந்திரி எஸ். கே. டே ஒரு நற்சான்றிதழ் தந்திருக்கிறார்.

#### வேலையே செய்வதில்லை

"பிரதேச அபிவிருத்தி இலாகா அதிகாரிகள் அடிக்கடி மேலிடத்து (சர்க்கார்) உத்தரவு என்று கூறும் பழக்கமுடையவர்களாயிருக்கின்றனர்.

"மேலிடத்து உத்தரவுகள் என்று கூறுகிற அதிகாரிகள், வேலை செய்வது இல்லை.

#### ஏன் ஆட்சேபிக்கவில்லை?

"பிரதேச அபிவிருத்தி அதிகாரிகள், அந்தப் பிரதேசத்தில் தங்கள் அலுவலகத்தினை சொந்தக் கட்டிடங்களில் வைத்திருக்கவில்லை; தமிழ் நாட்டில்தான் இப்படி இருக்கிறது. வேறு மாநிலத்தில் எங்கும் இதைக் காணமுடியாது. மாநில சர்க்கார் இதற்காக ரூ. 25,000 ஒதுக்கியிருந்தும் அதிகாரிகள் சொந்தக் கட்டிடம் தேடிக் கொள்ள எண்ணவில்லை. மொத்தம் 120 திட்டப் பிரதேசங்களில் மூன்றிற்குமட்டுமே சொந்தக்கட்டிடங்கள் உண்டு. இந்த நிலையை எவருமே ஏன் ஆட்சேபிக்கவில்லை என்பது எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது."

## பொன்மலைப்பட்டியில்

**தி. மு. க. சட்டசபை-பாராளுமன்ற உறுப்பினர்களுக்குப் பாராட்டு**

15—4—57, பொன்மலைப்பட்டி டாக்டர் பி. எஸ். பி. நாயுடு அவர்கள் பங்களாவில், பொன்மலை தி. மு. கழகச் சார்பில் பகல் 12 மணியளவில் தி. மு. கழக சட்டசபை—பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு உணவும், பிற்பகல் 4-30 மணிக்கு, சுவைநீர் விருந்தும், மாலை 5 மணிக்கு வ. உ. சி. திடலில் பாராட்டு விழாவும் நடைபெறும்.

## அண்ணா அவர்களுக்கு

**வரவேற்பு — பாராட்டு விருந்து**

16—4—57 காலை 10 மணிக்கு, பெரம்பலூர்—எசனை ஊராட்சி மன்றத்தாரால் அண்ணா அவர்களுக்கு வரவேற்பளிக்கப்படும்.

பிற்பகல் 1 மணிக்கு, பூலாம்பாடி கிராமத்தில் வரவேற்பளிக்கப்படும்.

மாலை 3 மணிக்கு, பெரம்பலூர் இலட்சுமி டூரிங் டாக்கீஸ் உரிமையாளர்களால் பாராட்டு விருந்து அளிக்கப்படும்.

## வதியம் ஊராட்சி மன்ற வரவேற்பு

14—4—57 மாலை 6-மணியளவில், வதியம் (குளித்தலை—கரூர் பாதையில் ½ மைல் தூரத்தில் உள்ளது) ஊராட்சி மன்ற சார்பில் தி. மு. க. சட்டமன்ற—பாராளுமன்ற உறுப்பினர்களுக்கும், பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன், துணைப் பொதுச்செயலாளர் என். வி. நடராசன் ஆகியவர்களுக்கும், வரவேற்பும், தேநீர் விருந்தும் அளிக்கப்படும்.

## தி. மு. க. சட்டமன்ற-பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு பாராட்டுவிழா

**பொன்மலைப்பட்டி:**
வ. உ. சி. திடலில்
15—4—57 மாலை 5-மணிக்கு
தலைவர்: கே. காமாட்சி
பேசுவோர்:
**அண்ணா**
இரா. நெடுஞ்செழியன்
ஈ. வெ. கி. சம்பத்
மு. கருணாநிதி

★

**திருச்சி:**
டவுன் ஹால் முன்
15—4—57 மாலை 6-மணிக்கு
தலைவர்: ஆர். நாகசுந்தரம்
பேசுவோர்:
**அண்ணா**
இரா. நெடுஞ்செழியன்

★

**பெரம்பலூர்:**
ரேடியோ மைதானத்தில்
16—4—57 மாலை 7-மணிக்கு
தலைவர்: அரு. ஆதிமூலம்
பேசுவோர்;
**அண்ணா**
பி. ஆர். இரத்தினசாமி
(மாலை 4-மணிக்கு லட்சுமி டாக்கிசிலிருந்து மாபெரும் சைக்கிள் ஊர்வலமொன்று நடைபெறும்)

#### திருமணம்

14—4—57 காலை 9-மணிக்கு சென்னை—கோடம்பாக்கம் (சூளைமேடு) நீலகண்டன் வீதி, எண். 21 இல்லத்தில், தோழர் த. சா. நாராயணன்—தோழியர் சி. சு. கோடீசுவரி வாழ்க்கை ஒப்பந்தவிழா, திரு கா. அப்பாதுரையார் தலைமையில் நடைபெறும்; திரு. த. கு. முருகேசனார், வ. ச. சங்கரநாராயணன் ஆகியோர் வாழ்த்துரை வழங்குவர்.

#### சென்னை-வண்ணையம்பதி தமிழ் இளைஞர் கழகம்

14—4—57 காலை 10 மணியளவில், தனலட்சுமி உயர்தர ஆரம்பப் பள்ளியில், திருக்குறளில் 'புகழ்' என்ற அதிகாரத்தைப் பற்றி திரு. சாமிசிதம்பரனார் சொற்பொழிவாற்றுவார்.

இராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24. சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ.

